4th March 1958]

Sri V. SANKARAN : நான் வேடிக்கையாக ஒரு கேள்வி கேட்டால் கனம் அங்கத்தினர் கோபித்துக்கொள்ளமாட்டார் என்று நினைக்கிறேன். எத்தனை ஹரிஜனங்கள் அங்கே சேர்க்கப்பட்டார்கள் ?

Mr. SPEAKER : I rule that question out of order. I would like hon. Members to take things seriously.

Sri R. SRINIVASA IYER : Is there any proposal to start a Mental Hospital in Tanjore district?

The Hon. Sri M. A. MANICKAVELU : We are thinking of starting a medical college there. I do not know whether a Mental Hospital is necessary there! (Laughter).

*Tools factory at Salem*

*189 Q.—Sri M. P. SUBRAMANIAM : Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to start a semi-machine tools factory at Salem, making use of the locally available raw materials?

The Hon. Sri R. VENKATARAMAN : No, Sir.

Sri M. P. SUBRAMANIAM : ஒவ்வொரு மாவட்டமாக ஐந்தாண்டுத் திட்டப் பிரசாரப் புத்தகம் வெளியிடப்பட்டிருக்கிறது. அது போல, சேலம் மாவட்டப் பிரசாரப் புத்தகத்தில், அங்கே ஸெமி-மெஷின் டூல் பாக்டரி யொன்று ஆரம்பிக்கப் போவதாகக் குறிப்பிடப் பட்டிருக்கிறது என்பது கனம் அமைச்சருக்குத் தெரியுமா ? அது வெறும் பிரசாரத்திற்காகத்தானே என்று வெளியிடப்பட்டதா ? அல்லது திட்டம் எடுத்துக்கொள்வதற்காகப் போடப்பட்டதா ?

The Hon. Sri R. VENKATARAMAN : கோரிக்கை ஒன்று. நிறைவேற்றுவதற்காக நாம் முயற்சி எடுத்துக்கொண்டு சாதிப்பது ஒன்று. எல்லா ஜில்லாக்களிலும் நாம் இந்த விதமாக சிறு கருவிகள் உற்பத்தி செய்ய வேண்டுமென்பது அரசாங்கத்தினுடைய நோக்கம். அவ்வாறு ஒவ்வொரு இடத்திலும் வைக்க வேண்டுமென்று தீர்மானித்து போட்டிருந்தோம். இப்பொழுது அந்த விதமாக சிறு கருவிகள் செய்கின்ற இயந்திரம் அங்கு வைப்பதாக திட்டத்தில் இல்லை.

Sri M. P. SUBRAMANIAM : ஐந்தாண்டுத் திட்டப் புத்தகத்தில் என்ன ஆதாரத்தின்கீழ் இந்தத் திட்டம் எடுத்துக்கொள்ளப்படும் என்று குறிப்பிடப்பட்டது ? பிறகு என்ன கஷ்டத்தின் காரணமாக அந்தத் திட்டம் கைவிடப்பட்டது என்று அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri R. VENKATARAMAN : நான் ஆரம்பித்தில் சொன்னதுபோல், ஒவ்வொரு ஜில்லாவுக்கும் சிறு கருவிகள் செய்கின்ற ஒரு ஸ்தாபனம் வைக்க வேண்டும் என்பது நம்முடைய நோக்கம். அந்த முறையிலே செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால், நிதி நிலைமைக் குறைவினாலும், சிறு கைத்தொழிலுக்காக ஒதுக்கப்பட்ட தொகை சற்றுக் குறைந்துவிட்டதாலும், இவ்விதமான திட்டம் 1958–59-ல் நிறைவேற்ற அங்கே எடுத்துக்கொள்ளப்படவில்லை. அடுத்த வருஷத்தின் நிதி நிலைமையைப் பார்த்து, பிறகு இதைப்பற்றி முடிவு செய்யலாம்.

Sri D. S. AUTHIMOOLAM : நமது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இப்படி ஸெமி-டூல்ஸ் பாக்டரி என்று ராஜ்யத்திற்கு எத்தனை பாக்டரிகள் ஆரம்பிப்பதாக உத்தேசம் இருக்கிறது என்று தயவு செய்து சொல்ல முடியுமா ?

[4th March 1958

MR. SPEAKER : The hon. Member may put a separate question.

THE HON. SRI R. VENKATARAMAN : I have some information here which I think I can give.

MR. SPEAKER : All right. I have no objection.

THE HON. SRI R. VENKATARAMAN : பீளமேட்டிலுள்ள பி.எஸ்.ஜி. அண்டு சாரிடபிள் இனஸ்டிட்யூட்டில் சிறு கருவிகள் செய்வதற்காக லைசன்ஸ் வழங்கப்பட்டிருக்கிறது. கோயம்புத்தூரிலுள்ள அப்பாய் மெஷின் டூல்ஸ் (ப்ரைவேட்) லிமிடெட் என்னும் ஸ்தாபனத்திற்கும் ஒரு லைசன்ஸ் வழங்கப்பட்டிருக்கிறது. அடிசன் கம்பெனியாருக்கு இம்மாதிரி சிறுகருவிகள் செய்வதற்கான லைசன்ஸ் வழங்கப்பட்டிருக்கிறது.

*Primary Health Centre*

* 190 *Q*.—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state the number of Primary Health Centres opened during the year 1957–58, district-war?

THE HON. SRI M. A. MANICKAVELU : A statement [a] is placed on the table of the House which refers to the number of centres sanctioned for being opened.

SRI P. G. MANICKAM : இந்த ஜாப்தாவில் தெரிவிக்கப்பட்டிருக்கும் 45 சுகாதார நிலையங்களிலும் டாக்டர்கள், சுகாதார இன்ஸ்பெக்டர்கள், சுகாதார பார்வையாளர்கள், போன்றவர்கள் வேலை செய்கின்றார்களா ? அல்லது அப்படிப்பட்ட சிப்பந்திகள் இல்லாமல் இன்னும் எத்தனை சுகாதார நிலையங்கள் இருக்கின்றன என்று அறியலாமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த ஜாப்தாவிலே கண்டுள்ள சில ஆஸ்பத்திரிகள் இன்னும் திறக்கப்படக்கூட இல்லை. காரணம் அவைகளுக்கு வேண்டிய டாக்டர்கள் கிடைக்காததுதான்.

SRI M. P. SUBRAMANIAM : ஆரம்ப சுகாதார நிலையங்கள் சாதாரணமாக நகரத்திற்குப் அப்பால் கிராமங்களில் அமைக்கப்படுவதால், நல்ல முறையிலே இயங்கவில்லை என்பதினால், அவைகளை பக்கத்திலுள்ள தாலூக்கா தலைமை ஆஸ்பத்திரியோடு இணைத்தால் நல்லது என்ற அபிப்பிராயம் அரசாங்கத்திற்கு இருக்கிறதா ? அப்படி இணைக்கப்படுமானால், தலைமை ஆஸ்பத்திரிகளிலுள்ள மருந்துகள் மொபைல் வான்கள் மூலம் அனுப்பப்படுவதற்கு சாத்தியமாகும் என்பதையும் அரசாங்கம் கவனிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மூலை முடுக்குகளிலே இருக்கும் கிராமங்களுக்கு வசதி கொடுக்கவேண்டும் என்பது முக்கியமான கருத்து. ஆனால், கிராமங்களிலே வைத்தியர்கள் போய் இருப்பது கஷ்டமாக இருக்கிறது. அதனால் அரசாங்கம் " நான்-ப்ராக்டிஸிங் " அலவன்ஸை 50-லிருந்து 100 ரூபாயாக்கியிருக்கிறோம். இந்தத் திட்டம் எவ்வளவு தூரம் பிரயோஜனப்படுகிறது என்று பார்ப்போம்.

SRI A. VEDARATHNAM : கனம் மந்திரி அவர்கள், ' பல நிலையங்கள் இன்னும் திறக்கப்படவே இல்லை ' என்று குறிப்பிட்டார்கள். திறந்த பிறகும் பல நிலையங்கள் டாக்டர் இல்லாமல் இன்னும் காலியாக இருக்கின்றனவா ? அப்படியானால் எத்தனை நிலையங்கள் இருக்கின்றன ? அவற்றில் டாக்டர்களை நியமித்து வேலை செய்வதற்கு என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் ?

---

a Printed as Appendix II on pages 231–232 infra.